# பாரதியின் சமுதாயப் பார்வை



கவிஞர் திருக்குறள் மதிப்புறு முனைவர் கேசவ சுப்பையா

# பாரதியார் சங்கம் ஒரு கண்ணோட்டம்

திருக்குறள் மதிப்புறு முனைவர்
**கேசவ சுப்பையா**
குமரி மாவட்டப் பாரதியார் சங்கத் தலைவர்.

மகாகவி சுப்ரமணிய பாரதியார் நினைவாக சென்னையில் பாரதியார் சங்கம் 1949 மார்ச்சுத் திங்கள் 17 ம் நாள் பாரதி நினைவுச் சங்கம் தொடங்கப்பட்டது. அதற்குத் தலைவராக கல்கி. ரா. கிருஷ்ண மூர்த்தியும் பொருளாளராக கல்கி டி. சதாசிவமும் தேர்வு செய்யப்பட்டனர். அதனைத் தொடர்ந்து ஆக்கூர் அனந்தாச்சாரி, முதறிஞர் ராஜாஜி, சிலம்புச் செல்வர் மா.பொ.சி. நாடகவேந்தர் அவ்வை தி.க. சண்முகம், எஸ்.வி. சகஸ்ரநாமம், பகீரதன், நாமக்கல் கவிஞர் வெ. இராமலிங்கம்பிள்ளை, பி.எஸ். குமாரசாமி ராஜா, திருப்புகழ் மணி டி.எம். கிருஷ்ணசாமி அய்யர், எஸ்.ஆர்.எப்.சி.டி.எ. அண்ணாமலைச் செட்டியார், டி.கே.எஸ். கலைவாணர், காரைக்குடி, சா. கணேசன், கோவை கே. சுப்பிரமண்யம், தர்மா சூடாமணி, கே. பாரசுப்பிரமணிய அய்யர். கோயில்பட்டி சண்முகம்பிள்ளை, தூத்துக்குடி எ.பி.சி. தேசபக்தவீரர், எஸ்.என். சோமயாஜலு, துரைசாமி நாடார், எட்டயபுரம், டி. சுவாமிநாதன் சார்தார் . வேதரத்னம்பிள்ளை மேயர் எஸ். இராமசாமி நாயுடு, விட்டலாபுரம் டி. சுவாமிநாதன் சர்தார் வேதரத்னம் பிள்ளை, மேயர் எஸ். இராமசாமி நாயுடு, விட்டலாபுரம் வெங்கடாச்சாரி, மு. கந்தசாமி செட்டியார் ஆகியோர் பொறுப்பேற்று நடத்தி வந்தனர்.

11.9.1945 இல் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியர் எட்டயபுரத்தில் பாரதி மணிமண்டப அடிக்கல் நாட்டினார். 1948 இல் எட்டயபுரத்தில் பாரதி மணிமண்டபம் வங்கக் கவர்னராயிருந்த இராஜாஜி அவர்கள் திறந்து வைத்தார். அவ்விடத்தில் பாரதியின் சிலையும் நிறுவப்பட்டது.

ஆண்டுதோறும் பாரதியின் நினைவுநாளை இச்சங்கம் சென்னையில் சிறப்பாக நடத்தி வருகிறது. இச்சங்கத்தில் ரா.பி. சேதுப்பிள்ளை, தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், பாலி.சு. நெல்லையப்பர், சங்கு சுப்பிரமணியர், ஹரிஹர சர்மா, பி.ஸ்ரீ. ஆச்சார்யா, வையாபுரிப் பிள்ளை, அருட்செல்வர் நா. மகாலிங்கம் ஆகிய சான்றோர்களும் கலந்து சிறப்பித்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

மேலும் பாரதிவிழாவில் அன்றைய தமிழக முதல்வர் கர்மவீரர் காமராசரும், கேரளா முதல் கே. கருணாகரன், கர்நாடக முதல்வர் நிஜலிங்கப்பா போன்றோரும் பங்கேற்றுள்ளனர்.

இப்பொழுது சங்கப் பொறுப்பை மூத்த வழக்கறிஞர் திரு. காந்தி, செயலர் செந்தமிழ்த் தேனி இரா. மதிவாணன், திருமதி. உலகநாயகி ஆகியோரால் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

இத்தகு சிறப்பு வாய்ந்த பாரதிக்குச் சென்னையில் தலைமையகம் தொடங்கப்பட்டு 61 ஆண்டுகள் நிறைவுற்றன.

இச்சங்கத்தின் கிளை குமரி மாவட்டத்தில் 19.9.2009 ல் குமரி மெட்ரிக் பள்ளியில் தொடங்கப்பட்டு 13 மாதங்கள் கழிந்து 23.1.2011 ல் முதலாண்டு விழா காண்கிறது.

**பேரா. மு. பத்மநாபன், M.Sc., M.Phil.**
**துணைத்தலைவர், பாரதியார் சங்கம்**

# அணிந்துரை

முனைவர் கேசவ சுப்பையா அவர்கள் ஒரு சிறந்த பன்முகப் புலமை பெற்றவர். ஆசிரியராக, கவிஞராக, நாடக ஆசிரியராக, இயக்குனராக, நடிகராக, சிலம்ப நுணுக்கம் கற்ற ஆசானாக, ஜோதிடராக அரசியல்வாதியாக, இலக்கிய ஆர்வலராக, குறள் நெறியுரைத்து நிற்கும் ஆய்வாளராக, புகழ்பெற்ற அவர்கள் ஏறத்தாழ இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாக "குமரிக் கலைக் கழகத்தையும்" நடத்தி வருகிறார். அவர் சமூக நலம் கருதிடும் ஒரு சமுதாயச் சிந்தனையாளர். அவரது சமூகச் சிந்தனையின் வெளிப்பாடுதான் இந்தக் கவிதை.

பாரதிகண்ட சமுதாயமேம்பாட்டுச் சிந்தனைகளை நமது கவிஞர் அவர்கள் தமக்குச் சாதகமாக்கி மகிழ்கிறார். பாரதியின் பன்னோக்குச் சிந்தனைகளுள் ஒன்றுதான் இந்தச் சமுதாய மேம்பாட்டுச் சிந்தனை. அவரை ஒத்தச் சிந்தனையாளரான கவிஞர் அவர்கள் "பாரதியின் சமுதாயப் பார்வை" என்னும் இக்கவிதையைத் தந்துள்ளார்.

ஒரு படைப்பாளி தான் வாழும் காலத்துச் சமுதாயத்தின் சீர்கேடுகளைச் சாடுவதோடு, அவை நீக்கி எழுச்சிபெறும் வகை உரைத்து நிற்பது இயல்பு. இதுபற்றி

பாரதியின் பார்வையைத் தன் பார்வையில் வரிகள் தந்து பாடுகிறார்.

ஓடிவிளையாடு பாப்பா என்றழைத்து அவர்கட்கு அறம் கூறிநின்ற பாரதியின் பார்வையை "பாப்பாவைக் கூட்டிவைத்து பல்லறங்கள் ஊட்டுவித்த பாரதியின் பார்வை எல்லாம் பாரில் சமுதாயப் பார்வையே" என்கிறார்.

பெண்ணடிமைப் பேசிநின்ற சமுதாயத்தைப் பாடிநின்ற பாரதியின் பெண்ணுரிமைப் பேணும் சிந்தனையை, பெண்மனத்தைக் கண்டு, அவர்தம் பேதமை நீக்க எண்ணி, அவரது ஞானத் திண்மை போற்றிப் பாடுகிறார் நம் கவிஞர்.

ஜாதிகள் இல்லையடி பாப்பா என உரைத்து, குல ஏற்றத் தாழ்வுகளைக் களைந்திட விழைந்தார் பாரதி. அதையே நம் கவிஞர், 'பறையர் புலையர் என்றும், பரவர் குறவர் என்றும் மறையவர் மற்றவர் என்றும், இறையவன் வகுக்கவில்லை. ஏழை அடிமை என்றும், இழிந்த மனிதரென்றும், இந்தியர் எவருமில்லை', என்றுரைக்கிறார்.

இமயம் முதல் குமரி வரை ஒன்றெனக்கண்டவர் பாரதி. நமது கவிஞர் அதனையே "தேசிய ஒருமைப் பாட்டைத் தினமும் மனதில் கொள்ளச் சொல்கிறார்".

அடிமைத்தளையகற்ற முனைந்த பாரதியை நம் முனைவர், "அன்னியர் நம்மை ஆளும் அவலக்காட்சி

கண்டு இன்னிலை, என்றுமாறும், இன்னல்கள் என்று மீளும்" என்கிறார்.

இவ்வாறாக, சமுதாய மேம்பாட்டுச் சிந்தனையில் ஊன்றி நின்ற பாரதியின் சமுதாயச் சிந்தனையினை ஒன்றி நின்றே கவியாத்துப் பாரதிக்குப் புகழ்சேர்த்துள்ளார் நம் பாரதியார் சங்கத் தலைவர்.

பாத்திரம் அறிந்து பாடும்
பாரதி பாட்டில் எல்லாம்
பார்த்திடும் பார்வை என்றும்
பற்பலச் சமுதாயப் பார்வை" என்கிறார்.

இக்கவிதை நமது கவிஞரது வானொலி உரையாகும். சமுதாயப் பார்வையில் பாடிய பாரதி இக்கவிதை மூலமாய் வானில் நின்று வாழ்த்து ஒலி வழங்குவது ஒலிக்கிறது.

# பாரதியின் சமுதாயப் பார்வை

1. குறுநடை யிட்டு வந்த
குழந்தையை நிறுத்தி விட்டு,
மறுநடை இட்டு நின்ற
மழலை மொழிகள் கேட்டு,
இனிஎன்ன கொடுப்ப தென்று
நனிமிகு சுவைகள் சொட்ட
தனியொரு அறமே விளம்பித்
தந்த பாப்பாப் பாட்டில்;

2. கூடி விளையாடு என்றும்,
குழந்தையை வையாதே என்றும்,
கூட்டி விளையாடு அந்தக்
கோழியை வாழ்வில் என்றும்
கரவா கரைந்து உண்ணும்
காக்கைக் கிரங்கு என்றும்
விரைவாய் வண்டி இழுக்கும்
குதிரையை விரும்பு என்றும்;

3. வாலைக் குழைக்கும் நாயும்,
பாலைப் பொழியும் ஆவும்,
கோலைக் காட்டி நன்றாய்க்
குறுணியை உழும் மாடும்,
அண்டிப் பிழைக்கும் ஆடும்,
ஆதரிக்க வேணும் பாப்பா
என்று உரைத்துத் தந்த
எழில்மிகு அவன் பாட்டும்;

4. காலைப் படிப்பும் பாட்டும்
மாலை மகிழ்ந்து விளையாட்டும்
நூலை வாழ்வில் ஓதி
நிதமும் நன்று அறிவூட்டும்
சாதி இல்லை உனக்குச்
சாத்திரம் நிரம்பக் கற்றோர்
நீதி, உடையோர் மேலோர்
நீணிலத் திதுவே என்றான்.

5. நாட்டின் எல்லை காட்டி
நடந்திடும் முறையை ஊட்டி
ஏட்டில் எழுதி வைத்த
எழில்மிகு அவன் பாட்டோ,
தந்தை கடமை காட்டி
தாயின் கருமம் காட்டி
எந்தை நினைவை ஊட்டி
இணைமலர் பாதம் பாடி.

6. நிந்தனை வாழ்வில் நீங்கி
நிலைபெறும் வழியைக் காட்டி
சிந்தனைத் தீயை மூட்டிச்
சீர்பெற வாழச் சொன்னான்
பூனைகள் நிறங்கள் கூறிப்
புவியினில் ஒருமைப் பாடும்,
ஏனைய அறங்கள் கூறி
எப்படி வாழ்வ தென்றும்
பாப்பாவைக் கூட்டி வைத்துப்
பல்லறங்கள் ஊட்டு வித்து
பாரதியின் பார்வை எல்லாம்
பாரினில் சமூகப் பார்வையே

7. பெண்மை மனத்தைக் கண்டு
பேதைமை நீக்க எண்ணி
திண்மை அன்னார்க் குண்டு
தெரிந்திடல் வேணும் என்று
நிமிர்நடை பார்வை தந்து
நிலத்தினில் எவர்க்கும் அஞ்சா
நெறிகளும் ஞானத் திண்மை
நிறைந்தவர் பெண்மை என்றான்.

8. சாத்திரப் பெண்ணைச் சாடிச்
சரிநிகர் சமான மாக்கி
தோத்திரப் பாவில் பெண்ணைத்
தெய்வமாய் அன்று சண்டான்
பாத்திரம் அறிந்து பாடும்
பாரதி பாட்டில் எல்லாம்
பார்த்திடும் பார்வை என்றும்
பற்பல சமுதாயப் பார்வையே!

9. இரும்பைக் காய்ச்சி விட்டு

விரும்பிய பொருளை ஆக்கி

கரும்பினைப் பிழிந்து விட்டு

கருப்பம் வெல்லம் ஆக்கி

அரும்பிய வியர்வை விட்டு

அருந்திறல் தொழில்கள் ஆக்கித்

தரும்நல் கரங்கள் கண்டு

தரணியின் புகழைப் பாடி,

10. மண்ணைக் குடமாய் ஆக்கி

மரத்தை மனைய தாக்கி

விண்ணைப் பிளந்து செல்லும்

வேடிக்கை மனித ராக்கி

பண்ணைப் பழகு தொழிலைப்

பாங்குறச் செயல தாக்கும்

எண்ணப் பார்வை எல்லாம்

ஏந்தலின் சமுதாயப் பார்வையே

11. புதிய ஆத்தி சூடி
புனைந்து புவியில் சூடி
பதிய வைத்தே நம்மைப்
புவியில் திரிய வைத்து
விதியை வகுத்துத் தந்து
பதியை அடையத் தூண்டும்
புதிய பாவின் பார்வை
பாரதி சமுதாயப் பார்வையே!

12. மனமெனும் மேடை யேறி
மங்கல நாதம் ஓதி
தினமவன் கூவி நின்று
தீந்தமிழ்ச் சுருதி மீட்டி
மதனெனும் வானில் மோதி
மதியிருள் மூழ்கா வண்ணம்
விதவிதப் பார்வை யெல்லாம்
பாரதி சமுதாயப் பார்வையே

13. காக்கை குருவி ஒன்றே
கடலும் மலையும் ஒன்றே
தீய்க்குள் மறைந்தே இருக்கும்
தீயின் சூடும் ஒன்றே
காய்க்குள் புளிப்பும் ஒன்றே
கனிக்குள் இனிப்பும் ஒன்றே
விண்ணின் ஒளியும் ஒன்றே
விழுமிய பொருளும் ஒன்றே

14. எண்ணில் விளையாடல் செய்யும்
ஈசனின் விளையாட் டெல்லாம்
மண்ணில் புரிந்து வாழும்
மனிதர்க்குக் கூறி நின்று
நண்ணும் நாத விந்து
நாதனின் நாமம் என்று
நயந்து பயந்த தெல்லாம்
வியப்புறு பார்வை யன்றோ!

15. கோழை நாடி பார்த்து
குன்றிய உணர்வைத் தொட்டு
ஏழை அல்ல என்றும்
எந்தலே என்று தட்டி
இச்சகம் எதிர்த்தே வந்து
துச்சமே பேசி னாலும்
அச்சமே இல்லை என்றும்
அவனியில் உனக்கு, என்று,

16. இச்சை கொண்ட எல்லாம்
இழந்தே போயிட் டாலும்
பிச்சை கேட்டு வாழும்
பிழைப்பே வந்துற் றாலும்
நச்சை நண்பர் வாயில்
இச்சகத் தூட்டிட் டாலும்
உச்சியில் வானம் வீழ்ந்து
உன்னையே அழித்திட்டாலும்,

17. அச்சமே இல்லை! நன்றே
அவனியில் வாழு என்று
இச்சகத் துளோர்க்கு என்றும்
இணையிலா உறுதி தந்து
துச்சமே அன்று, வாழ்வு
துணிந்துநீ வாழ்க என்று
பச்சைக் குழந்தைக் கூட்டி
பாரினில் அறம் உரைத்தான்

18. பிறரை வருத்தி வாழும்
பேதையர் மீதும் சாடி
வறட்டு வேதம் கூறி
வருவோர் மீதும் சாடி
பெறட்டும் புத்தி என்று
பீடு கொண்டு பாடி,

19. சுதந்திரத் தேரில் ஏறிச்
சுற்றியே பார்க்க எண்ணி
விதந்தரு மாந்தர் தம்மை
வெருவியே நிற்கப் பண்ணி
நிதமிவர் நின்ற தன்மை
நேரிலே கண்டு நொந்து
பதங்களால் கோத்துக் கூறும்
பாக்களின் பார்வை என்னே!

20. நெகிழ்ந்து உருகி நின்றான்
நெஞ்சம் நொந்து நின்றான்
மகிழ்ந்து இருந்து காண
மட்டற்ற ஆர்வங் கொண்டான்
குமுறும் ஒலிகள் கேட்டும்
குந்தகச் செயல்கள் கண்டும்
மறுகும் அன்னான் உள்ளம்
மங்கிய ஆடி யாச்சு

21. அன்னியர் நம்மை ஆளும்
அவலக் காட்சி கண்டு
இன்னிலை என்று மாறும்
இன்னல்கள் என்று மீளும்
துன்னிய அடிமை வாழ்வில்
துவளும் பிடிகள் தீரும்
நன்னிலை வந்து எய்தும்
நாளதை எண்ணி நின்றான்.

22. வெள்ளையர் ஆட்சி வீழ்ந்து
விடுதலை பெற்று வாழ
கொள்ளையர் ஆளும், கோலக்
கொடுமைகள் குன்றி வாழ
பாரத அன்னை பாதம்
பரவியே பணிந்து நின்று
நீரதன் புதல்வர் என்று
நெஞ்சிலே பதிய வைத்தான்.

23. முந்தையர் வாழ்ந்த நாடு
முனிவர்கள் வாழ்ந்த நாடு
தந்தையர் தாயர் நாடு
சிந்தையில் இதனை நாடு
வந்தனை என்றும் பாடு
வாழ்ந்திட ஒன்று கூடு
விந்தைகள் வினைகள் என்றும்
விரும்பியே செய்யச் சொன்னான்

24. பறையர் புலையர் என்றும்
பரவர் குறவர் என்றும்
மறையவர் மறவர் என்றும்
இறையவன் வருக்க வில்லை
ஏழை அடிமை என்றும்
இழிந்த மனித ரென்றும்
இந்தியர் எவரும் இல்லை
என்றவன் முழங்கி னானே.

25. தேசிய ஒருமைப் பாட்டைத்

தினமும் மனதில் கொள்ளச்

காசி காஞ்சி என்றும்

காவிரி கங்கை என்றும்

சிங்களம் வங்கம் என்றும்

சேரர் தெலுங்கர் என்றும்

சிங்க மராட்டி என்றும்

சீரிய கன்னடர் என்றும்,

26. வெற்றிலை மாறு கொண்டும்

பெற்றிடும் பேற்றை எல்லாம்

மாற்றியே கொள்க என்றும்

சாற்றியே கொள்கை ஈந்தான்

தெலுங்கு மராட்டி என்று

தேசத்தில் பாட்டி சைத்து

குலுங்கப் பாடி நித்தம்

கோலமாய் நிற்கச் சொன்னான்

27. வள்ளுவம் சிலம்பு வளமிகு கம்பன்
உள்ளுவம் என்று உரைத்த திறமும்,
தெள்ளு தமிழைத் திக்கெலாங் கொண்டு
வாழ்வம் என்று விளம்பிய திறமும்
பாழ்பட்டு நின்ற பாரதம் தன்னை
வாழ்விக்க எண்ணி வந்த காந்தி
வெள்ளை மனிதரே வெளியே றென்று
கொள்ளை உணர்வைக் கொண்ட கோகலே
உள்ளிட்ட விடுதலை வீரர்கள் நெஞ்சிலே
பள்ளிப் பாடமாய்ப் பதிந்து விளங்கிட
பாவில் பாரதி பண்பாட் டுணர்வுடன்
பரவிப் பாடிய பாட்டின் திறமும்,
சமுதாய உணர்வுடன் சாற்றினான், என்று
சகலரும் உரைப்ப,ர் சகத்தினில் நன்றே!



## திருக்குறள் மதிப்புறு முனைவர்

# கேசவ சுப்பையா

'துவாரகா', ஏ.125, அரசு அலுவலர் குடியிருப்பு,
காந்திநகர், நாகர்கோவில் - 629 002.
அலைபேசி. 9786882558, 9443580797

இக்கவிதை ஆசிரியர் 79 அகவை முதிர்ந்த மூத்த தமிழறிஞர். திருக்குறள் ஆய்வுமையம், பாரதியார் சங்கம், உலகத்தமிழ்க் கழகம், திருமந்திர ஆய்வுக்கழகம், குமரிக்கலைக் கழகம் போன்ற அமைப்புகளின் பொறுப்பேற்றுத் தொய்வின்றி பல்லாண்டுகள் தமிழ்ப்பணியும், கலைப்பணியும் ஆண்மிகப் பணியும் ஆற்றி வருகின்றார்.

பன்னாட்டுக் கருத்தரங்குகளிலும் மாநில, மாவட்டக் கருத்தரங்குகளிலும் கட்டுரைகள் படித்துள்ளார். திருக்குறளையும், திருமந்திரத்தையும் இருகண்களாகப் போற்றி ஆய்வுரைகள் நிகழ்த்தி வருபவர். கவிதை நூல் இயற்றியவர்.

இத்துடன் அமையாது சமூகப் பணிகளில் தன்னை முழுமையாக ஈடுபடுத்தியுள்ளார். இவரது ஐம்பதாண்டுச் சமுதாயச் சேவைகளை மதித்து இலங்கை மாற்று மருத்துவச் சர்வதேசப் பல்கலைக் கழகம் கோலாலம்பூரில் **மதிப்புறு முனைவர்** பட்டம் வழங்கியது. மேலும் பாரத ரத்னா டாக்டர் எம்.ஜி.ஆர். விருது, திருக்குறள், திருக்குறள் திலகம், மனிதநேயர், சேவைச் செம்மல், இலக்கியத் தென்றல், தமிழ்மாமணி, அருங்கலை வித்தகர், இந்திரா காந்தி சம்மான் பிரஷ்கார், ஆன்மிகச் செம்மல் போன்ற விருதுகள், மாவட்ட, மாநில, தேசிய அளவில் பெற்றவர்.

சமய நல்லிணக்கத்திற்காகப் பாடுபடுபவர். இன்னும் எத்தனையோ அமைப்புகளில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டு வருகிறார். மேலும் பலவிருதுகள் பெறவும், சமூக சேவைகள் செய்யவும், நெடிதுநாள் வாழ்ந்து சேவையாற்ற இறைவனை வேண்டுகிறேன்.

இவண்,

**இரா. இராசகுமார்,** M.A., M.Phil.,

பொதுச்செயலர், பாரதியார் சங்கம்.